10th September 1958]

**Sri M. JAGANNATHAN** : தலைவர் அவர்களே, திண்டிவனம் தாலூகாவில் கூடலூர் கிராமத்தில் ஜனங்கள், தொகையை வசூலித்து அங்குள்ள ஸப்-ட்ரஷரியில் கட்டியிருக்கிறார்கள். அவ்விதமிருந்தும் இது வரை மனைக்கட்டுகள் வாங்கிக் கொடுக்கப்படவில்லை. இந்த காலதாமதத்திற்குக் காரணம் என்ன என்பதைக் கனம் அமைச்சர் அவர்கள் விளக்குவார்களா ?

**The Hon. Sri P. KAKKAN** : எனக்குக் கிடைத்திருக்கிற தகவலில் கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுவது மாதிரி இல்லை. விழுப்புரம் ஹரிஜன இன்ஸ்பெக்டரிடம் விசாரணை செய்யச் சொல்லியிருக்கிறேன்.

**Sri A. GOVINDASAMY** : கனம் அங்கத்தினர் ஜகந்நாதன் அவர்களுடைய கேள்வியில் பணம் கொடுத்திருப்பதாக இருக்கிறது. ஆனால் அமைச்சர் அவர்கள் பதிலில் பணம் கொடுக்கவில்லை என்ற தகவல் இருப்பதால் அமைச்சர் அவர்கள் இதை மீண்டும் பரிசீலிப்பார்களா ? ஆதித் திராவிட மக்களுக்கு இலவசமாக நிலம் வழங்க அரசாங்கம் முயற்சிக்குமா ?

**The Hon. Sri P. KAKKAN** : எல்லா இடங்களிலும் இலவசமாகக் கொடுப்பதில்லை. எங்கெங்கு கொடுக்க வசதியிருக்கிறதோ அங்கங்கு சிறிதளவு வாங்குவது வழக்கம். கனம் அங்கத்தினர் சொல்வதையும் பரிசீலித்துப் பார்க்கிறேன்.

*Village roads*

* 139 *Q.*—Sri K. RAMACHANDRAN : Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the number and extent of village roads formed during 1956–57 and 1957–58 under the Local Development Scheme; and

(*b*) the expenditure incurred therefor by the Government during those years?

The Hon. Sri C. SUBRAMANIAM : (*a*) 1,063 village roads to the extent of 1,083 miles $2\frac{1}{2}$ furlongs for 1956–57 and 482 roads to the extent of 510 miles 6 furlongs for 1957–58 have been formed under the Local Development Works Programme.

(*b*) The total expenditure incurred in 1956–57 and 1957–58 in respect of above works is Rs. 32,54,878·74 and Rs. 15,50,519·29 respectively.

**Mr. SPEAKER** : அடுத்தக் கேள்வி 140-ம் கேள்வி.

**Sri D. S. AUTHIMOOLAM** : ஆன் எ பாயிண்ட் ஆப் ஆர்டர், ஒவ்வொரு கேள்வியிலும், உப கேள்விகள் போடுவதற்கு அங்கத்தினர்களுக்குச் சந்தர்ப்பம் கொடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

**Mr. SPEAKER** : எந்த விதிப் பிரகாரம் நீங்கள் இதைக் கேட்கிறீர்களென்று சொல்லுங்கள்.

*Ban to stage a drama*

* 140 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Avanashi Police, Coimbatore district, prohibited the staging of a drama near Avanashi by any Kisan organization in February 1958; and

(*b*) if so, the reason therefor?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) & (b) There was no prohibition of any such drama by the Avanashi Police in February 1958. I may however add that on 22nd February 1958 the Taluk Magistrate, Avanashi, passed an order under section 144, Cr.P.C., prohibiting the performance by the local Vivasayigal Sangam of a street drama entitled "Yijamanar" at Sellappampalayam, hamlet of Ambodi village which is situate within the limits of Amur Police station. The drama was prohibited on the ground that it was intended to abuse a section of the villagers and that if the drama in question were permitted, it was likely to cause obstruction to traffic and annoyance to the public and also likely to lead to rioting, bloodshed and serious breach of peace and public tranquillity.

SRI M. KALYANASUNDARAM : May I know whether the Government have examined the subject-matter of that drama and have found it objectionable? If so, will the Hon. Minister be pleased to place a copy of the same, marking therein the objectionable portions, on the table of the House?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I would like to submit that in order to circumvent the provisions of the Dramatic Performances Act, this was presented as a street drama. Therefore, the Government have had no opportunity to go into the contents of the text.

**SRI N. K. PALANISAMY :** ஒரு நாடகத்தைத் தடை செய்ய வேண்டுமென்றால் அதனுடைய சப்ஜெக்ட் மாட்டர் என்ன என்பதை மாஜிஸ்டிரேட்டிடம் காட்டித் தடை செய்யவேண்டும். ஒரு சப்–இன்ஸ்பெக்டர் தடை செய்வது நியாயமா? இது சட்டத்திற்குப் புறம்பாகாதா என்று அறிய விரும்புகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** சப்–இன்ஸ்பெக்டர் தடை விதிக்க வில்லை. போலீஸ் இன்ஸ்பெக்டருடைய ரிப்போர்ட்டின் பேரில் தாலூகா மாஜிஸ்டிரேட் தடை விதித்திருக்கிறார்.

**SRI A. GOVINDASAMY :** ஒரு நாடகத்தை தடை செய்ய வேண்டுமென்றால் அந்த நாடகத்தின் கதை பூராவும் போலீஸ் இன்ஸ்பெக்டர் பரிசீலனை செய்து ஆட்சேபகரமாக ஏதாவது இருந்தால்தான் தடை செய்ய சிபாரிசு செய்ய வேண்டும். இந்த நாடகத்தைப் பரிசீலிக்காமல் தடை செய்வதற்கு சிபாரிசு செய்யப்பட்டதா? இந்த நாடகத்தை முன்பு சப்-இன்ஸ்பெக்டர் பார்த்திருக்கிறாரா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இந்த நாடகம் தடை செய்யப்படவில்லை. இந்த நாடகத்தைத் தெரு நாடகமாக—தெருக் கூத்தாக —நடிப்பதால் ஊரில் சச்சரவு ஏற்படும் என்ற காரணத்தை போலீஸ் இன்ஸ்பெக்டர் காட்டியிருக்கிறார். அதை ஏற்றுக்கொண்டு மாஜிஸ்டிரேட் தடை உத்திரவு போட்டிருக்கிறார்.

### *Rubber*

* 141 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) the area under rubber plantation;

(b) whether there is any proposal to open a rubber research laboratory; and

(c) if so, the details thereof?